

**மீள்குடியேறியவர்களுக்கு நிரந்தர வீடுகள் அமைத்துக் கொடுக்கப்படும்**

கிளிநொச்சி மாவட்ட அரச அதிபர் ரூபவதி கேதீஸ்வரன் அவர்களின் நேர்காணல்.

PAGE 3



**மீள்குடியேற்றத்திற்குச் சவாலாக விளங்கும் கண்ணிவெடியகற்றும் பணிகள்**

அரசின் மீள்குடியேற்ற திட்டத்திற்கமைய கண்ணிவெடியகற்றும் நடவடிக்கைகள்

PAGE 4



# மீண்டும் வாழ்வோம்

මීන්ඩුම් වාල්වෝම්

பக்கங்கள் Pages 8

Vol 2 | No 56

இலவச பிரதி
Free Copy

Lifeline | Humanitarian Information For IDPs

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான தகவல் பரிமாற்றம்

14.03. 2010

# மீள்குடியேற்றப் பகுதியில் சிகரட் பாவனை அதிகரிக்கும் அபாயம்

*கிருஷ்ணி, டி.சார்ள்ஸ் பீட்டர்ஸ்*

யுத்தத்தினால் பாதிக்கப்பட்டு இடப்பெயர்வுக்குள்ளானவர்களில் பெரும்பாலானவர்கள் அவர்களது சொந்த இடங்களில் மீளக் குடியமர்த்தப்பட்டுள்ள நிலையில், அவர்களில் சில இளைஞர்கள் புகைத்தல், மதுபானம் அருந்துதல் போன்ற சில தீய பழக்கங்களுக்குள்ளாகி வருகின்றனர் என தெரிய வருகின்றது.

குறிப்பாக, பாடசாலைக்குச் செல்லும் வாய்ப்பை இழந்தவர்களும், தொழிலில்லாமல் இருப்பவர்களுமே இவ்வாறான பழக்கங்களுக்குள்ளாகின்றனர் என விசனம் தெரிவிக்கப்படுகிறது.

> *“இங்கு பெரும்பாலானவர்கள் மீளக் குடியமர்த்தப்பட்டுள்ள நிலையில், இளைஞர்களில் சிலர் மட்டும் புகைத்தல், மதுபானம் அருந்துதல் போன்ற பழக்கங்களில் ஈடு பட்டு வருகின்றனர். ”*

‘வவுனியா வடக்கு - கற்குளம் பகுதியில் தாம் மீளக் குடியமர்த்தப்பட்டுள்ள நிலையில், அங்குள்ள இளைஞர்களில் ஒரு சிலர் சமூக சீரழிவுகளுக்கு உட்பட்டு வருகின்றனர்’ என அப்பகுதியைச் சேர்ந்த கு.நிஷாந்தி தெரிவித்தார்.

இதுபற்றி அவர் மேலும் கூறுகையில், ‘இங்கு பெரும்பாலானவர்கள் மீளக் குடியமர்த்தப்பட்டுள்ள நிலையில், இளைஞர்களில் சிலர் மட்டும் புகைத்தல், மதுபானம் அருந்துதல் போன்ற பழக்கங்களில் ஈடுபட்டு வருகின்றனர். இது அவர்களது எதிர்காலத்தை பாதிப்பது மட்டுமல்லாது அயலவர்களுக்கும் பெரும் பிரச்சினையை ஏற்படுத்துகிறது’ என்றார்.

இதேவேளை, இவ்வாறான சமூக சீரழிவுகளுக்கு முகங்கொடுத்துவரும் இளைஞர்களை நல்வழிக்கு கொண்டுவருவதற்காக தனியார் தொண்டு நிறுவனங்களும் இலங்கை குடும்பத் திட்டப் பணியகமும் சில செயற்திட்டங்களை மேற்கொண்டு வருகின்றன. கடந்த வாரம் குடும்பத் திட்டப் பணியகம் மீள்குடியேற்றப் பகுதிகளில் இளைஞர்கள் சிகரெட் புகைப்பதை கட்டுப்படுத்துவதற்காக விழிப்புணர்வு நிகழ்ச்சித் திட்டம் ஒன்றினை நடத்தியதாக சுகாதார கல்விப் பணியகத்தின் வைத்திய நிபுணர் எஸ். நஜூமுடீன் தெரிவித்தார். எதிர்வரும் காலங்களில் மேற்படி பல திட்டங்களை யாழ்ப்பாணம் மற்றும் ஏனைய மீள்குடியேற்றப் பகுதிகளில் தொடர்ச்சியாக நடத்துவதற்கு சுகாதார அமைச்சு தீர்மானித்துள்ளது.

கற்குளத்தில் இயங்கிவரும் கிராமிய அபிவிருத்தி நிதியம் சமூக சீரழிவுகளுக்கு முகங்கொடுக்கும் இளைஞர்களை நல்வழிக்கு கொண்டுவரும் நடவடிக்கையில் ஈடுபட்டுள்ளது.

தமது செயற்பாடுகள் தொடர்பில் அந்நிதியத்தின் வெளிக்கள உத்தியோகத்தலைவர் தியாராஜன் கூறுகையில், ‘புகைத்தல், மதுபானம் அருந்துததல் போன்ற பழக்கங்களுக்குள்ளாகிவரும் இளைஞர்களில் பலருக்கு நாம் விழிப்புணர்வுத் திட்டங்களை முன்னெடுத்து வந்தோம். அந்த வகையில், பெரும்பாலான இளைஞர்கள் தீய பழக்கங்களை கைவிட்டு நல்வழிக்கு வந்துள்ளனர். ஒரு சிலர் மட்டுமே தொடர்ந்தும் இப்பழக்கத்தில் இருக்கின்றனர். அவர்கள் தொடர்பில் நாம் கூடிய கவனம் செலுத்தியுள்ளோம்’’ என தெரிவித்தார்.

அத்தோடு சமூக சீரழிவுகளுக்கு முகங்கொடுக்கும் இளைஞர்களை நல்வழிக்கு கொண்டுவருவதற்கும் அவர்கள் தீய பழக்கங்களில் ஈடுபடுவதைத் தடுக்கவும் பொலிஸாருடன் இணைந்து செயற்திட்டமொன்றை முன்னெடுக்க நடவடிக்கை எடுத்துள்ளதாக வவுனியா மாவட்ட அரசாங்க அதிபர் திருமதி சார்ள்ஸ் தெரிவித்தார்.



> *“அத்தோடு சமூக சீரழிவுகளுக்கு முகங்கொடுக்கும் இளைஞர்களை நல்வழிக்கு கொண்டுவருவதற்கும் அவர்கள் தீய பழக்கங்களில் ஈடுபடுவதைத் தடுக்கவும் பொலிஸாருடன் இணைந்து செயற்திட்டமொன்றை முன்னெடுக்க நடவடிக்கை எடுத்துள்ளோம்”*
>
> **- வவுனியா மாவட்ட அரசாங்க அதிபர் சார்ள்ஸ்**

**புகைத்தல் உடல் நலத்திற்கு கேடு விளைவிற்கும்**



இதுபற்றி அவர் மேலும் தெரிவிக்கையில், ‘மீள் குடியேற்றப் பகுதிகளில் சமூக சீரழிவுகளை எதிர்கொண்டுள்ள இளைஞர்களுக்காக பொலிஸாருடன் இணைந்து விழிப்புணர்வு திட்டங்களையும், கருத்தரங்குகளையும் நடத்த தீர்மானித்துள்ளோம். இது தொடர்பில் பேச்சு

» 8 ஆம் பக்கம்

## புகை....

வாழ்ந்துகொண்டே செத்துப்போக
உன்னால் முடியுமா?
இருமல் பிடித்து இறந்துபோக
இஷ்டப்படுகிறாயா?

உனக்கு நீயே கொள்ளி வைக்க
பிரியப்படுகிறாயா?
உன்னை எரிப்பது உனக்குத் தெரியாது
ஆனால் நீ எரிந்துகொண்டிருப்பாய்...
புகைத்துப் பார்!

**ரஜீவன் கோமதன்**
வலயம் - 4
செட்டிக்குளம்.

# பூகோள அரங்கில் மனிதாபிமானப் பணிகள்

தொகுப்பு : நிரஞ்சனி ரோலண்ட்

## சிலி



Photo courtesy of flickr.com

கடந்த வாரம் சிலியில் ஏற்பட்ட 8.8 ரிச்டர்; அளவிலான பூகம்பத்தால் சுமார் 700 பேர் வரை உயிரிழந்துள்ளதுடன் பலர் காயமடைந்துள்ளனர். அங்கு பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக் கான மனிதாபிமான உதவிகளை மேற்கொள்வதில் சிரமங்களை எதிர்கொள்வதாக மனிதாபிமானப் பணிகளை முன்னெடுக்கும் அமைப்புக்கள் தெரி வித்துள்ளன.

பூகம்பத்தால் அங்குள்ள பாலங்கள் மற்றும் வீதி கள் மோசமாகப் பாதிப்படைந்ததையடுத்து பாதிக் கப்பட்ட மக்களுக்கான கூடாரங்கள், உணவு, குடிநீ ர்;த் தாங்கி மற்றும் போர்வைகளை வழங்குவதில் சிக்கல் நிலை தோன்றுவதாக அந்த அமைப்புக்கள் சுட்டிக்காட்டியுள்ளன. இதேவேளை, பாதிக்கப்பட் டவர்களுக்கு உணவுப் பொருட்களை வழங்குவ தற்காக கொன்சென் பகுதியையும் சந்தியாகோ நகரையும்; இணைக்கும் வகையில் பாலமொன்று அமைக்கப்படுவதாகவும் இதனூடாக 100 தொன் உணவுப் பொருட்கள் கொண்டு செல்லப்படவுள்ள தாகவும் தெரிவிக்கப்படுகின்றது.

## ஹெய்டி

ஹெய்டியில் பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்கு கல்விச் சேவைகளை வழங்கும் பொருட்டு தற்காலிகப் பாடசாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. இந்த பாடசாலைகள் கடந்த வாரம் ஆரம் பிக்கப்பட்டதையடுத்து சுமார் 132 சிறுவர்கள் பாடசாலைக்கு சமுகம ளித்திருப்பதாகவும் இந்த எண்ணிக்கை 400 ஆக அதிகரிக்க வாய்ப் பிருப்பதாகவும் தெரிவிக்கப்படுகின்றது.

பாடசாலைகளை நிர்மாணிப்பதற்கான உதவிகளை சேவ் த சில்ரன் அமைப்பு வழங்கியுள்ளது. எதிர்காலத்தில் 300 தற்காலிகப் பாடசா லைகளை நிர்மாணிப்பதற்கான நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட வுள்ள அதேவேளை, பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட பாடசாலைகளை மீள் நிர்மாணிக்கும் பணிகளும் முன்னெடுக்கப்படும் என சேவ் த சி ல்ரன் அமைப்பு தெரிவித்துள்ளது. ஹெய்டியில் இடம்பெற்ற பூகம் பத்தால் 40 வீதமான பாடசாலைகள் சேதமடைந்ததுடன் 4 இலட்சம் சிறுவர்கள் தமது கல்வியை இழந்தமை குறிப்பிடத்தக்கது.






## பிலிப்பைன்ஸ்



பிலிப்பைன்ஸில் தற் போது நிலவிவரும் வரட்சி அங்குள்ள விவ சாயத்துறையினை பெரு மளவில் பாதித்துள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது. இதனால் 239 மில்லியன் டொலர்கள் நட்டம் ஏற்பட் டுள்ளதாக பிலிப்பைன் ஸின் விவசாயத் திணைக் களம் தெரிவித்துள்ளது. பிலிப்பைன்ஸிலுள்ள 14 கிராமங்கள் வரட்சியினால் பாதிக்கப்பட்டுள்ளதாகக் கூறப்படுகின்றது. வரட்சியின் காரணமாக உணவுப் பற்றாக்குறை ஏற்படுவ தற்கான வாய்ப்புக்கள் இல்லாத போதிலும் எதிர்காலத்தில் அவ்வாறான நிலைமைகள் ஏற்படும் பட்சத்தில் அதனை எதிர்கொள்ளும் பொருட்டு நீர்ப்பாசனத் திட்டங்கள் முன்னெ டுக்கப்படுவதாக விவசாய திணைக்களம் தெரிவித்துள்ளது.

## உகண்டா



Photo courtesy of flickr.com

வட உகண்டாவில் சிறுவர் தொழிலாளர்களின் எண்ணிக் கையைக் குறைப்பதற்கான திட்டத்தை சர்வதேச பாதுகாப் புக் குழு முன்னெடுத்துள்ளது. வறுமையின் காரணமாக வட உகண்டாவிலுள்ள அநேகமான சிறுவர்கள் சிறுவர் தொழி லாளர்களாக மாறியுள்ளதாக சர்வதேச பாதுகாப்புக் குழுவின் மேற்பார்வையாளர் சாவுன் ஓ டொனெல் தெரிவித்துள்ளார்.

சிறுவர் தொழிலாளர்களின் எண்ணிக்கையைக் குறைக்கும் முகமாக அங்குள்ள 60 கிராமங்களில் வாழ்ந்து வரும் மக்க ளுக்கு சர்வதேச பாதுகாப்புக் குழு கடனுதவிகளை வழங்கி வருகின்றது. இதேவேளை, வியாபாரமொன்றை ஆரம்பிப் பது தொடர்பான அறிவுரைகளை கிராமத்தவர்களுக்கு வழங் குவதற்கான திட்டங்களையும் இந்தக் குழு மேற்கொண்டு வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

---

உங்கள் கதைகள்

# தீர்ப்புக்கள் திருத்தப்படலாம்

சாகீர் மொஹம்மட்

**'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சியில் உங்கள் கதைகள் தொடர் நாடக வடிவில் இடம்பெற்று வருகின்றன. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒலிபரப் பாகும் நாடகங்களின் தொகுப்பை இப்பத்திரிகை வாயிலாகவும் உங்களுக்குத் தருகிறோம். கடந்தவாரம் இடம்பெற்ற 'தீர்ப்புக்கள் திருத்தப்படலாம் ' நடகத்தின் சாராம்சத்தினை இங்கு தருகிறோம்.**

**நகுலன், பவித்ரா, அம்மா சரண்யா மற்றும் பாலன் இவர்களுக்குள் பின்னப்பட்டதாய் அமைந்திருக்கிறது தீர்ப்புக்கள் திருத்தப்பட லாம் நாடகம்.**

ஊதாரியா இருந்த என்னை மனுசனா மாத்தினதே பவித்ராதான் என்று நகுலன் தன் தாய் சரண்யாவிடம் சொல்லி பெரு மிதம் கொள்கின்றான். உன்னைப் பார்க் கும் போது ரொம்ப சந்தோஷமா இருக்கு நகுலா. அதுக்கு அந்த பவித்ராவுக்கு நான் கடமைப்பட்டிருக்கேன் என்கிறாள் சரண் யா. இருவரும் இவ்வாறு சொல்வதிலி ருந்து ஒரு ஆணின் வெற்றிக்குப் பின்னால் ஒரு பெண் இருக்கிறாள் என்ற சித்தாந்தம் தான் நாடகத்தின் கருவாய் இருக்கப் போகி றது என்பது முதலிலேயே தெளிவாகிறது.

பவித்ரா இன்று நகுலனின் வீடு வருவ தாய் கடிதம் வருகிறது. கடிதம் தந்த காத்தி ருப்புக்கு விடை கிடைக்கிறதா?

நகுலனின் காத்திருப்பில் சங்கமிக்கின் றன பழைய காதல் நினைவுகள். காதலுக்கே உண்டான பொய்க்கோபம், சிணுங்கல், சண் டைகள் என பவித்ராவை சந்திக்கும் முன் அவளுடனான பழைய காதல் நினைவுகள் நாடகத்தில் காட்சிப்படுத்தப்படுவது அரு மை. கதவு தட்டப்படுகின்றது. நகுலனின் நினைவுகள் நிகழ்காலத்திற்குள் வருகின்றன. யார் அங்கே,அவன் காதலி பவித்ராவா?

> கையில் குழந்தையுடன் ஒரு அம்மாவாகவும் விதவையா கவும் வந்திருக்கும் அவளைக் காணும் நகுலனும் சரண்யாவும் அதிர்ச்சியின் ஆழத்திற்கே செல்கின்றார்கள்

ஆம், அவள்தான். சிறு மாற்றம். கையில் குழந்தையுடன் ஒரு அம்மாவாகவும் வித வையாகவும் வந்திருக்கும் அவளைக் காணும் நகுலனும் சரண்யாவும் அதிர்ச் சியின் ஆழத்திற்கே செல்கின்றார்கள். பவித்ரா நகுலனுக்கு துரோகம் செய்து விட் டாளா? நமது கேள்விக்கு கடந்த காலம் இவ்வாறு பதில் தருகிறது.

அப்பா என்னால நகுலன மறக்க முடி யல்ல. நீங்க ராஜேஸுக்கு பட்ட கடனுக்கு என்னோட நிம்மதிய அடகு வைக்கப் பார்க்குறீங்க என்று கதறியழும் அவளின் ஆர்ப்பாட்டம் அவள் அப்பா பாலனினால் கண்டுகொள்ளப்படவேயில்லை. பாலனின் கடனுக்காக மகளின் வாழ்க்கும் காதலும் கல் யாணம் என்ற பெயரில் பழிவாங்கப்படு வதில் பவித்ராவை யாரும் துரோகி என்று சொல்ல முடியாது.

கதை கேட்ட நகுலன் திகைத்தான். ஒரு வனின் மனைவியாய் இருந்து கொண்டு காதலித்த பாவத்திற்காக தன்னை டெலி போன் மூலமே மனுசனாக்கிய பவித்ராவை நினைத்து உள்ளுக்குள் அழுதான். ஒரு வருடத்துக்குள் அவளது வாழ்வு அஸ்த்த மித்துப் போனதையிட்டு சரண்யா துடித்துப் போனாள். பவித்ராவோ நமது பரிதாபத்திற் குரியவளாகிறாள்.

இறுதியாக, நகுலனின் முடிவு நமக்கெல் லாம் ஒரு பாடமாய் அமைகிறது. சரண்யா வினதும் பாலனினதும் ஆசிர்வாதத்துடன் பவித்ராவை திருமணம் செய்கின்றான் நகு லன். ஒரு புதிய வாழ்விற்குள் அவர்களது பயணம் தொடர்வதாய் கடவுளின் தீர்ப்பு திருத்தி எழுதப்படுகின்றது. திருத்தப்படும் தீர்ப்புக்கள் ஒரு உண்மைக் காதலுக்கான வெற்றி மட்டுமே.

# மீள்குடியேறியவர்களுக்கு நிரந்தர வீடுகள் அமைத்துக் கொடுக்கப்படும்

**கிளிநொச்சி மாவட்டத்தில் முன்னெடுக்கப்பட்டு வரும் மீள்குடியேற்றப் பணிகள் மற்றும் உட்கட்டமைப்புப் பணிகள் தொடர்பில் கிளிநொச்சி மாவட்ட அரச அதிபர் ரூபவதி கேதீஸ்வரன் அவர்களின் நேர்காணல்.**

செவ்வி INTERVIEW

வியாஸ.கல்யாணசுந்தரம்



ரூபவதி கேதீஸ்வரன்

**வவுனியா நலன்புரி நிலையங்களிலிருந்து கிளிநொச்சி மாவட்டத்தில் மீள்குடியேற்றப்பட்டவர்களின் விபரங்களைத் தெரிவிக்க முடியுமா?**

கிளிநொச்சி மாவட்டத்தில் கடந்த வருடம் நவம்பர் மாதம் 6ஆம் திகதியிலிருந்து மீள்குடியேற்றப் பணிகள் ஆரம்பிக்கப்பட்டு இற்றை வரை 8,746 குடும்பங்களைச் சேர்ந்த 27,918 பேர் மீள்குடியேற்றப்பட்டுள்ளார்கள். ஆரம்பகட்டமாக பூநகரி பிரதேச செயலாளர் பிரிவுகளில் மீள்குடியேற்றப் பணியை நாங்கள் ஆரம்பித்திருந்தோம். பின்னர் கரச்சி பிரதேச செயலகப் பிரிவில் கண்ணிவெடிகள் அகற்றப்பட்டன. அங்கு 8 கிராமங்களில் மீள்குடியேற்றப் பணிகளை ஆரம்பித்தோம். பின்னர் மேலதிகமாக 3 கிராமங்களில் மீள்குடியேற்றப் பணிகள் இடம்பெற்று தற்போது கரச்சி பிரதேச செயலாளர் பிரிவில் மொத்தமாக 11 கிராமங்களிலும் பூநகரி பிரதேச செயலாளர் பிரிவில் 19 கிராம சேவையாளர் பிரிவுகளிலும் மீள்குடியேற்றம் முடிவடைந்துள்ளது. அத்தோடு கடந்த மாதம் பச்சிளப்பள்ளி பிரதேச செயலாளர் பிரிவில் 4 கிராம சேவையாளர் பிரிவுகளிலும் கண்டாவளை பிரதேச செயலாளர் பிரிவில் 3 கிராமசேவகர் பிரிவுகளிலும் நாங்கள் தற்போது மீள்குடியேற்றப் பணிகளை ஆரம்பித்திருக்கின்றோம். இதனடிப்படையில் எமது மாவட்டத்திலுள்ள 4 பிரதேச செயலாளர் பிரிவுகளிலும் மீள்குடியேற்றப் பணிகள் ஆரம்பிக்கப்பட்டுவிட்டன.



புதிதாக நிர்மாணிக்கப்பட்ட கட்டிடத்தொகுதி

**மீளக் குடியமர்த்தப்பட்டவர்கள் தங்களது வாழ்வாதாரத்தை முன்னெடுப்பதற்காக எத்தகைய வசதிகள் செய்து கொடுக்கப்பட்டுள்ளன?**

மீளக்குடியமர்ந்து தமது வீடுகளுக்குச் செல்கின்றவர்களுக்கு 5000 ரூபாய் பணம் வழங்கப்படுகின்றது. அத்தோடு UNHCRஇனால் மேலதிகமாக 20,000 ரூபாய் வழங்கப்படுகிறது. இந்தப் பணம் அவர்களுடைய உடனடித் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளவும் தற்காலிக வீடுகளை அமைத்துக்கொள்ளவும் உதவியாக வழங்கப்படுகிறது. எம்முடைய மாவட்டம் விவசாயப் பிரதேசமாக இருக்கின்ற காரணத்தினால் அவர்களது வாழ்வாதாரத்தை ஆரம்பிக்க விவசாய உள்ளீடுகள் விவசாயத் திணைக்களத்தினால் அவர்களுக்கு வழங்கப்படுகின்றது. மேட்டுநில பயிர்ச்செய்கைகளை மேற்கொள்கின்ற அதேவேளை, நெற்பயிர் செய்கைகளை மேற்கொள்வதற்கான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அதனடிப்படையில் பூநகரி பிரதேச செயலாளர் பிரிவுக்கு உட்பட்ட கரியாலை நாபடுவான் என்கின்ற குளத்தை அண்டிய 600 ஏக்கர் விவசாய நிலம் பயிர்செய்கைக்கு உட்படுத்தப்பட்டுள்ளது. இரணைமடு குளத்திலிருந்து நீர் பாசணத்தைப் பெற்றுக் கொள்கின்ற மீள்குடியேற்றப்பட்ட மக்களுக்கு 2000 ஏக்கர் வயல் நிலங்களில் பயிரிடுவதற்கான ஒழுங்குகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இதேவேளை, சிறு வியாபாரங்களில் ஈடுபடும் பூநகரி பிரதேச செயலாளர் பிரிவைச் சேர்ந்த மக்களுக்கு சிறு கடன் உதவிகளும் வழங்கப்பட்டுள்ளன.



படம்: வியாஸ.கல்யாணசுந்தரம்

பணியாளர்களுக்கு வழங்கப்பட்ட மோட்டார் வாகனங்களின் ஒரு தொகுதி

**மாணவர்களுக்கான கற்றல் செயற்பாடுகள், பாடசாலை கட்டிடங்களின் திருத்தப் பணிகள் எவ்வாறு இடம்பெற்று வருகின்றன?**

> *“மீளக்குடியமர்ந்து தமது வீடுகளுக்குச் செல்கின்றவர்களுக்கு 5000 ரூபாய் பணம் வழங்கப்படுகின்றது. அத்தோடு UNHCR-இனால் மேலதிகமாக 20,000 ரூபாய் வழங்கப்படுகிறது.”*

கரச்சி பிரதேச செயலாளர் பிரிவிற்குட்பட்ட 9 பாடசாலைகளும் பூநகரி பிரதேச செயலாளர் பிரிவிற்குட்பட்ட 18 பாடசாலைகளும் மீளவும் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. புதிதாக மீள்குடியேற்றம் இடம்பெற்ற கண்டாவளையில் ஒரு பாடசாலையினையும் பச்சிளப்பள்ளியில் ஒரு பாடசாலையினையும் மீள ஆரம்பிப்பதற்கான நடவடிக்கைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. மாணவர்களுக்கு சீருடைகள், பாடப்புத்தகங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. அத்தோடு UNHCR நிறுவனத்தினால் எழுதுகோல்கள், அப்பியாச புத்தகங்கள் என்பன வழங்கப்பட்டிருக்கின்றன. கரச்சிப் பிரதேசத்திலுள்ள பாடசாலைகள் புனரமைக்கப்பட்ட நிலையில்தான் மீளவும் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. பூநகரி பிரதேச செயலாளர் பிரிவில் கட்டிட பற்றாக்குறை காணப்படுகின்றது. எனவே அங்கு தற்காலிகமாகப் பயிலும் இடங்களை அமைத்து கற்றல் நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட்டு வருகின்றன.

**மீள்குடியேறியவர்களுக்கு நிரந்தர வீடமைப்புத் திட்டங்களை அமைத்துக் கொடுப்பது தொடர்பில் என்ன வகையான முடிவுகள் எட்டப்பட்டுள்ளன?**

உடைந்த வீடுகளை மீளத் திருத்தவும் அல்லது புதிதாகக் கட்டவும் திட்டங்கள் இருக்கின்றன. அதனடிப்படையில் எமது மாவட்டத்தில் வடக்கு, கிழக்கு வீடமைப்புத் திட்டத்தின் ஊடாக 3,640 வீடுகள் அமைத்துக்கொடுக்கப்படவிருக்கின்றன. ஆரம்பகட்டமாக தற்காலிக இருப்பிடங்களை அமைத்துக்கொள்ள இந்திய அரசாங்கத்தின் நிதியுதவியின் மூலம் குடும்பமொன்றிற்கு 12 கூரைத் தகடுகள் வழங்கப்படுகின்றன.IOM நிறுவனத்தின் மூலமும் அவர்களுக்கான டர்போலின் கூரைத் தகடுகள் வழங்கப்படுகின்றன. இவற்றைக் கொண்டு அவர்கள் தங்களுடைய இருப்பிடங்களை அமைத்துக் கொள்கின்றார்கள். அத்தோடு களிமண்ணைக் கொண்டு தற்காலிக வீடுகளை அவர்கள் அமைத்து வருவதையும் நாங்கள் காணக்கூடியதாக இருக்கின்றது. அவர்களுக்கு நிரந்தரமான வீட்டைக் கட்டிக்கொடுக்க வேண்டும் என்பதுதான் எம்முடைய முன்மொழிவாக இருக்கின்றது. நிறுவனங்கள் முன்வருகின்ற பட்சத்தில் இதற்கான நடவடிக்கைகள் ஆரம்பிக்கப்படும்.

## மீள்குடியேற்றத்திற்கு சவாலாக விளங்கும்

# கண்ணிவெடியகற்றும் பணிகள்



படம் நிரஞ்சனி ரோலண்ட்

கண்ணிவெடிகளை அகற்றும் பணியாளர்கள் தமது பாதுகாப்பு உடையில்

*நிரஞ்சனி ரோலண்ட்*

**போரின் கோரத்தால் தமது உறவுகளையும் உடைமைகளையும் இழந்து நலன்புரி முகாம்களில் தங்கியிருந்த மக்களை அரசு துரிதமாக மீளக் குடியேற்றி வருகின்றது. இவர்களை மீளக் குடியேற்றுவதற்கான சவால்களில் பிரதானமானது கண்ணிவெடி அகற்றும் பணிகளே.**

இலங்கை இராணுவம், டெனிஷ் கண்ணிவெடியகற்றும் நிறுவனம் (DDG), சுவிஸ் கண்ணிவெடியகற்றும் நிறுவனம்(FSD), கண்ணிவெடி அகற்றும் குழு (MAG), சர்வத்திரா, ஹொரைசன், தேசத்தை கட்டியெழுப்பும் அமைச்சின் கீழ் இயங்கும் கண்ணிவெடி அகற்றும் பிரிவு மற்றும் ஹலோ டிரஸ்ட் ஆகியன கண்ணிவெடியகற்றும் பணிகளில் தம்மை ஈடுபடுத்தியுள்ளன.

இந்த நிறுவனங்கள் யாழ்ப்பாணம், கிளிநொச்சி, வவுனியா, மன்னார், திருகோணமலை, மட்டக்களப்பு, அம்பாறை, அனுராதபுரம் ஆகிய மாவட்டங்களில் கண்ணிவெடி அகற்றும் பணிகளில் ஈடுபட்டு வருகின்றன. அதேவேளை, இவ்வருடத்தின் இதுவரையான காலப்பகுதியில் 592.98 சதுர கிலோ மீற்றர் பரப்பளவில் கண்ணிவெடியகற்றும் நடவடிக்கைகள் பூர்த்தி செய்யப்பட்டுள்ளதுடன் 207,723 கண்ணி வெடிகளும் வெடிக்காத வெடிபொருட்களும் மீட்கப்பட்டுள்ளதாக தேசத்தைக் கட்டியெழுப்பும் அமைச்சின் கீழ் இயங்கும் கண்ணிவெடி அகற்றும் பிரிவு தெரிவித்துள்ளது.

இதேவேளை, அரசின் மீள்குடியேற்ற திட்டத்திற்கமைய முன்னுரிமை அடிப்படையில் மக்களை மீளக்குடியேற்றும் இடங்கள், அவர்களின் வாழ்வாதாரங்களை மேற்கொள்ளும் இடங்கள், உட்கட்டமைப்புக்களை மேற்கொள்ளும் இடங்கள், இடைக்கால மற்றும் குறைந்தளவு முன்னுரிமையுள்ள இடங்கள் என்ற அடிப்படையில் கண்ணிவெடியகற்றும் பணிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

இந்நிலையில், மடு பிரதேச செயலகப் பிரிவிலுள்ள சின்னப்பண்டிவிரிச்சான் பகுதியில் MAG நிறுவனத்தினால் முன்னெடுக்கப்படும் கண்ணி வெடி அகற்றும் பணிகளைப்

» 6 ஆம் பக்கம்

> “ *592.98 ச.கி.மீற்றர் பரப்பளவில் கண்ணிவெடியகற்றும் நடவடிக்கைகள் பூர்த்தி செய்யப் பட்டுள்ளது* ”

## கண்ணிவெடி உள்ள இடங்களை அடையாளப்படுத்தல்



அடையாளப்படுத்துதல்




நிறக் குறியீடுகள், உபகரணங்கள்

***கண்ணிவெடிகள் உள்ள இடங்களை அடையாளப்படுத்த வெள்ளைநிறம் பூசப்பட்ட தடிகள் நடப்படும். இதன் அடிப்படையில் கண்ணிவெடியகற்றும் நிபுணர்கள் அடையாளங்களை இடுவார்கள். அதேபோல் 120 செ.மீற்றர் தடியில் வெள்ளை நிறம் பூசப்பட்டு நடப்பட்டிருப்பின் அந்த இடம் பாதுகாப்பானது என பொருள்படும்.இங்கு கண்ணிவெடிகளை அகற்றும் பணிகளில் 15 நிபுணர்கள் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர்.***

***ஒவ்வொரு 15 மீற்றருக்குமிடையே வெள்ளை மற்றும் சிவப்பு நிறம் பூசப்பட்ட தடி நாட்டப்படும். அங்கு கண்ணிவெடிகள் புதைக்கப்பட்டுள்ளன என்பதற்கு அடையாளம் அது. அதேபோல், ஒவ்வொரு மீற்றருக்கும் இடையே சிகப்பு நிறத்திலான தடி நடப்பட்டிருப்பின் அது கண்ணிவெடி அபாயம் உள்ள இடம் என பொருள்படும். நீல நிறம் பூசப்பட்ட தடி நடப்பட்டால் கண்ணிவெடி அகற்றும் பணிகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன என அர்த்தப்படும்.***

***நீலம் மற்றும் வெள்ளை வர்ணங்கள் பூசப்பட்டிருந்தால் அந்தப் பகுதி கண்ணிவெடி அகற்றும் குழுத் தலைவரால் தீர்வை செய்யப்பட்ட பகுதி என பொருள்படும். முழுவதும் மஞ்சள் வர்ணம் பூசப்பட்ட தடி நடப்பட்டிருப்பின் அப்பகுதியில் கண்ணிவெடிகள் அகற்றப்பட்டுள்ளன என பொருள் படும். சிவப்பு மற்றும் மஞ்சள் நிறம் பூசப்பட்ட தடி நடப்பட்டிருப்பின் அது வெடிக்காத வெடிபொருட்கள் எடுக்கப்பட்ட இடம் என அர்த்தப்படும். மஞ்சள் மற்றும் சிவப்பு வர்ணங்கள் பூசப்பட்டிருப்பின் வாகன அழிப்பு, கண்ணி வெடிகள் எடுக்கப்பட்டது என்பதற்கு அடையாளம். சிவப்பு நிறம் பூசப்பட்ட இரண்டு தடிகள் குறுக்கே இருப்பதைப்போன்று நடப்பட்டிருக்கும் பட்சத்தில் அந்த இடத்தை தாண்டிச் செல்லக்கூடாது என அர்த்தப்படும்.***



**எக்ஸ்காவேட்டர் இயந்திரமானது** குறிப்பாக 1000 சதுர கிலோமீற்றர் அளவில் கண்ணிவெடியகற்றும் பணிகளை மேற்கொள்ளக் கூடியது. அதேபோல், **பொசினா இயந்திரமானது** தொலைதூர இயக்கியின் மூலம் இயக்கப்படும். இயந்திரத்திலிருந்து 100 மீற்றர் அப்பால் இருந்து இதனை இயக்க வேண்டும். நிபுணர்களின் பணியை இலகுப்படுத்துவதற்கு இது நிலத்தை இலகுவாக்கிக் கொடுக்கக்கூடியது.



# பெற்றோரின் ஒத்துழைப்பைக் கோரி நிற்கும் இடம்பெயர்ந்த மாணவர்கள்

> அரசும் பாடசாலையின் அதிபர், ஆசிரியர்களும் மாணவர்களின் கல்வி முன்னேற்றத்திற்கு தத்தமது கடமைகளை செய்தாலும் பெற்றோர்களும் கூடிய கவனம் செலுத்துவது அவசியம்



படம்: வியாஸ.கல்யாணசுந்தரம்

வவுனியா, வடக்கு வலயக் கல்விப் பணிப்பாளர் ரஞ்சனி ஒஸ்வெல்ட் பாடசாலை மாணவர்களின் பெற்றோர்களுடனான கலந்துரையாடலின்போது

*எஸ். நிஸாம் எம். ஸுஹைல்*

கடந்த காலங்களில் இலங்கையில் நிலவிய அசாதாரண சூழ்நிலைகளினால் இடம்பெயர்ந்த மாணவர்களின் கல்வியில் இடையூறுகள் ஏற்பட்டிருந்த போதும் அந்த நிலையை உடனடியாக சீர்படுத்தும் நடவடிக்கையில் அரசு ஈடுபட்டு வருகின்றது.

பிரமண்டு மகா வித்தியாலயம் தற்போது அதிகளவான வாகனங்கள் சென்று வரக்கூடிய ஏ9 பாதையை ஊடறுத்துச் செல்லும் தாண்டிக்குளத்தில் அமைந்துள்ளது. இங்கு 410 நிரந்தர மாணவர்களும் 382 இடம்பெயர்ந்த மாணவர்களும் கல்வி கற்று வருகின்றனர்.

இவ்வித்தியாலயத்தில் வவுனியா வடக்கு கல்விப் பணிப்பாளர் மற்றும் பிரதிக் கல்விப் பணிப்பாளர் ஆகியோர் பெற்றோர்களை நேரடியாக சந்திப்பதற்கான ஏற்பாடுகளை கடந்த 2ஆம் திகதி பாடசாலை அதிபர் மஞ்சுளா திருவருள்நேசன் மேற்கொண்டிருந்தார். அந்நிகழ்வுக்கு எமது 'மீண்டும் வாழ்வோம்' குழுவினரும் சென்றிருந்தோம்.

இவ்வித்தியாலயத்திற்குச் சென்றிருந்த போது இடம்பெயர்ந்த மாணவர்கள், பொற்றோர்கள் என பலரையும் சந்திக்கக் கிடைத்தது.

இடம்பெயர் சூழ்நிலை எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தினாலும் நன்றாகப் படிக்க வேண்டும் என்ற தமது இலட்சியத்தில் இடம்பெயர்ந்த மாணவர்கள் மும்முறமாக இருக்கின்றனர்.தரம்11இல் பயிலும் கோ. ஜயாலினி என்ற மாணவியின் முகத்தில் ஏக்கங்களும் தாக்கங்களும் அதிகமாகவே இருப்பது போல் தெரிந்தது. அவரிடம் நெருங்கிய போது....

> புலமைப்பரிசில் பரீட்சை, சாதாரண தரப்பரீட்சை போன்ற தேசிய மட்டத்திலான பரீட்சைகள் பள்ளிப் பருவத்தில் மாணவர்களுக்கு முக்கிய திருப்புமுனையாக அமைகின்றன.

என்னுடைய சொந்த இடம் மாதர்பணிகர் மகுளங்குளம். எனது அண்ணா ஒருவர் போரின்போது இறந்துவிட்டார். தம்பியொருத்தர் நோயின் காரணமாக இறந்துவிட்டார். தற்போது சகோதரர்கள் மூன்று பேர் இருக்கின்றோம். அதில் நான் தான் மூத்தவள். நான் கட்டாயம் படிக்க வேண்டும். எனக்கு கணிதப் பாடம் மட்டும் சற்று கஷ்டமாக இருக்கின்றது. தூரம் காரணமாக பாடசாலைக்குத் தாமதமாக வரும் சந்தர்ப்பங்களும் இருக்கின்றது என்றார்.

படிப்பதற்கான ஏக்கத்தோடு காத்திருக்கும் இடம்பெயர்ந்த மாணவர்களின் கல்வியை மேம்படுத்த எவ்வாறான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன என பிரமண்டு மகாவித்தியாலயத்தின் அதிபரிடம் கேட்டோம்.

அதன்போது அவர் இவ்வாறு பதிலளித்தார், எமக்கிருக்கும் வளங்களைக் கொண்டு எல்லா மாணவர்களுக்கும் சிறந்த முறையில் கல்வி வழங்கி வருகின்றோம். குறிப்பாக தரம் 5இல் புலமைப் பரிசில் பரீட்சைக்குத் தோற்றும் பிள்ளைகளுக்கும் சாதாரண தர பரீட்சைக்கு முகங்கொடுக்கவிருக்கும் மாணவர்களுக்கும் எமது ஆசிரியர்குலாம் கூடிய கவனம் செலுத்தி கற்பிக்கின்றனர். தரம் 5ஐப் பொறுத்தவரையில் பாடசாலை முடிந்தவுடன் மாலை 3.30 மணி வரை மேலதிக வகுப்புகள் நடைபெற்று வருகின்றன' என தெரிவித்தார்.

அரசும் பாடசாலையின் அதிபர், ஆசிரியர்களும் மாணவர்களின் கல்வி முன்னேற்றத்திற்கு தத்தமது கடமைகளை செய்தாலும் பெற்றோர்களும் கூடிய கவனம் செலுத்துவது அவசியம் என வவுனியா வடக்கு வலயக் கல்விப் பணிப்பாளர் ரஞ்சனி ஒஸ்வெல்ட் தெரிவித்தார். அவர் தொடர்ந்தும் தெரிவிக்கையில், நாம் பெற்றோர்களை பிள்ளைகளுக்கு படிப்பிக்கச் சொல்லவில்லை. அதனை ஆசிரியர்கள் செய்வார்கள். பெற்றோர்கள் தமது பிள்ளைகளின் கல்வி நடவடிக்கைக

*8 ஆம் பக்கம்*

# யுத்தம் வடக்கு, கிழக்குப் பகுதிகளில் உள்ள பெண்களை மட்டுமல்லாது, நாட்டின் பல பாகங்களிலும் இருக்கும் பெண்களையும் பல்வேறு விதத்தில் பாதித்துள்ளது

**- வின்னியா ஆரியரத்ன**

*ஏ. சொர்ணலிங்கம்*

இலங்கையில் பெண்கள் முகம் கொடுக்கும் பிரச்சினைகள் தொடர்பான ஒரு கருத்தரங்கு மற்றும் விழிப்புணர்வு நிகழ்ச்சி கடந்த 5 ஆம் திகதி கொழும்பில் நடைபெற்றது. இந்த நிகழ்வின்போது, பெண்கள் பல்வேறு துறைகளிலும் எதிர்நோக்கும் பிரச்சினைகள் தொடர்பாக கலந்துரையாடப்பட்டன.

ஐக்கிய நாடுகள் சபையின் ஒருங்கிணைப்பில் இந்நிகழ்வு கொழும்பு சின்னமன் கிராண்ட் ஹோட்டலில் நடைபெற்றது. இலங்கையில் கடந்த காலத்தில் இடம்பெற்ற யுத்தம் காரணமாக பல பெண்கள் தமது குடும்பப் பொறுப்புக்களை சுமக்கும் நிலைக்குத் தள்ளப் பட்டுள்ளார்கள்.

இந்நிலையில், யுத்தத்தினால் இடம்பெயர்ந்த மற்றும் மீளக்குடியேறிய பெண்களின் பிரச்சினைகள் குறித்து சர்வோதய அமைப்பின் நிறைவேற்றுப் பணிப்பாளர் வைத்திய கலாநிதி வின்னியா ஆரியரத்ன கருத்துரையாற்றினார்.

யுத்த சூழ்நிலையின்போது பெண்கள் தீர்மானம் எடுத்தல் மற்றும் திட்டமிடல் தொடர்பாக பிரச்சினைகளை எதிர்நோக்கி வந்தார்கள் எனக் கூறிய அவர் இலங்கையில் பெண்கள் பொதுவாக முகம் கொடுக்கும் பிரச்சினைகள் தொடர்பாக ஆராயவேண்டும் எனவும் கேட்டுக்கொண்டார்.



படம்: கிருஷ்ணி

கலாநிதி வின்னியா ஆரியரத்ன

யுத்தமானது, வடக்கு மற்றும் கிழக்குப் பகுதிகளில் உள்ள பெண்களை மட்டுமல்லாது, நாட்டின் பல பாகங்களிலும் இருக்கும் பெண்களையும் பல்வேறு விதத்தில் பாதித்துள்ளதாகவும் வின்னியா ஆரியரத்ன கூறினார். கடந்த 25 வருடங்களுடன் ஒப்பிடும்போது தற்போது நிலைமை மாறியுள்ளது என்பது அவரது கருத்து.

அவர் மேலும் கூறியதாவது:- தற்போது நாம் யுத்தத்தின் பின்னரான காலப்பகுதியில் வாழ்ந்து வருகின்றோம். எனினும், பல்வேறு பெண்கள் உதாரணமாக, வயோதிபர்கள், அங்கவீனப்பட்ட பெண்கள், முன்னாள் போராளிகள், முன்னாள் சிறுவர் பெண் போராளிகள் எனப் பலர் சமூகத்துடன் இணைக்கப்படவேண்டிய நிலையில் உள்ளார்கள் என்றார் கலாநிதி ஆரியரத்ன.

நவாலி தெற்கு, மானிப்பாயைச் சேர்ந்த விஜயகுமார் ரோஷினி, கணவன் கைது செய்யப்பட்டு தடுப்புக்காவலில் உள்ளதால், தனது மூன்று குழந்தைகளையும் தனியாகக் கவனித்துக் கொள்ளும் நிலைமைக்குத் தள்ளப்பட்டுள்ளார்.

மீளக்குடியமர்த்தப்பட்டபோது எமக்கு கொடுப்பனவுகள் கொடுக்கப்பட்டன. ஆனால் ஏனைய செலவுகளை சமாளிப்பது கஷ்டமாக உள்ளது என்றார் ரோஷினி.

இவ்வாறாக பல பெண்கள் பல விதங்களில் பாதிக்கப்பட்டுள்ளனர். பெண்கள் முகம் கொடுக்கும் சவால்கள் தொடர்பாகவும், அவற்றை எவ்வாறு தைரியமாக முகம் கொடுப்பது என்பது தொடர்பாகவும் பல விழிப்புணர்வு நிகழ்ச்சிகள் இலங்கையின் பல பகுதிகளிலும் நடாத்தப்பட்டுவருகின்றன.

# உங்களிடமிருந்து.....



## சுவடுகளே... என்னே துணிச்சல்?

கலகலப்பாய் விடியும் பொழுதுகள்
கனவுகளைச் சுமந்து திரியும் இளசுகள் என்று
கும்மாளமான அந்த நாட்களை
கும்மிருட்டுக்குள் தள்ளியது போரின் சுவடுகள்
கண் மூடி முழிக்கும்போதெல்லாம்
கண்ணாடி முன் நிற்பது போல் - என் முன்
விசுவரூபம் வேர் ஊன்றி நிற்கிறது!
என்னைவிட்டு விலகிப்போ என்று
நான் விரக்தியில் கத்தினாலும்
நீ நகம் நான் சதையென்று
இறுமாப்போடு சொல்கிறது இது...
இதற்கு என்னே துணிச்சல்?





**வ. மதுஜீவனா**
க.பொ.த சா/தரம்
வ/காமினி ம.வி.
வுவனியா

## என் கனவிலும் கூட



கனவுகளை சுமந்தபடி காத்திருக்கும்
நண்பர்களே கேளுங்கள்
கடல் கடந்தும் கூட தம் கனவுகளை
நனவாக்கி வெற்றி காண்பார்கள் - ஆனால்
நாமோ எம்மூருக்குப் போவதே கனவாகிறது!
முகமறியாது இருந்த எனக்கு
கிடைத்த முகவரிகள் பல! அதிலும்
சில இடையில் பிரிந்து செல்போனில் மட்டும்
குரல் செதுக்குகின்றன!

**எஸ். இன்பமதி**
இராமநான் நலன்புரி நிலையம்

## அம்மா உன்னை எப்படிப் போற்றுவது?



பத்துமாதம் என்னை
பக்குவமாய் சுமந்தவள் நீ
பசி வரும் வேளையில்
பால் தருபவள் நீ
நான் அழும்போது
அரவணைப்பவள் நீ
அல்லும் பகலும்
அயராது உழைத்தவள் நீ
இத்தனையும் செய்தாயே...
உனை எப்படிப் போற்றுவது?

**இ. டருசிகன்**
தரம் - 10
வ/கா.ம.வி.
வவுனியா

## அன்பான மீண்டும் வாழ்வோம் சுடரே!

சொல்லொண்ணாத் துயர்களை சுமந்து நிற்கும் எமக்கு புத்தொளியூட்டும் நோக்கில் களம் அமைத்துக் கொடுத்துள்ளாய். அரிய பல தகவல்களை அறியவைக்கும் உனது சேவைக்கு எமது பாராட்டுக்களும் நன்றிகளும். அன்பான சுடரே உனது சேவை தொடர வேண்டும் என வாழ்த்துகிறேன்.

**தியாகராசா செந்தூரன்**
வீ. இல. 200
இராமநாதன் ந.பு.நி.
செட்டிக்குளம்.

.................................................................

உங்கள் பத்திரிகையில் கண்ணிவெடி விழிப்புணர்வு தொடர்பான பக்கத்தைப் பிரசுரித்தமைக்கு மிக்க நன்றி. உங்கள் பத்திரிகையில்தான் முதன் முதலாக பெண்கள் கண்ணிவெடி அகற்றுவதைப் பார்த்தேன். கண்ணிவெடி அகற்றும் பணியில் இணைவதே எனது நீண்ட கால ஆசை.

**நி. மேகலா**
வீ. இல. 1038
யுனிட் - 4
அருணாச்சலம் ந.பு.நி.

## மீள்குடி.... (4ஆம் பக்கத் தொடர்ச்சி...)

பார்வையிடுவதற்கு எமக்கு சந்தர்ப்பம் கிடைத்தது. விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டுக்குள் இருந்த இப்பகுதியில் அதிகளவான கண்ணிவெடிகள் புதைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இப்பகுதியில் முன்னெடுக்கப்படும் கண்ணிவெடி நடவடிக்கைகள் குறித்து MAG நிறுவனத்தின் கண்ணிவெடி நிபுணர் குழுத் தலைவர் ராம் விளக்குகையில், 'முதற்கட்டமாக நாம் கண்ணிவெடி அபாயமுள்ள இடங்களை அடையாளப்படுத்தியுள்ளோம். மக்கள் இங்கு மீளக் குடியேற்றப்படும் பட்சத்தில் அவர்கள் அடையாளப்படுத்தப்பட்ட பகுதிக்கு அப்பால் செல்வதில்லை. இந்தப் பகுதியிலுள்ள ஏ பிரிவில் 72 வீடுகள் மற்றும் மலசலகூடங்கள், கிணறுகள் உள்ளடக்கப்படுகின்றன. இப்பகுதியில் கண்ணிவெடியகற்றும் பணிகள் பூர்த்தியடைந்துள்ளன. அதேவேளை, தற்போது இங்கு

பி மற்றும் சி பிரிவில் கண்ணிவெடியகற்றும் பணிகள் முன்னெடுக்கப்படுகின்றன.

இங்கு பாடசாலைகளும் ஆலயங்களும் காணப்படுகின்றன. இயந்திரங்கள் மற்றும் நிபுணர் குழுவினரின் உதவியுடன் இப்பணிகள் முன்னெடுக்கப்படுகின்றன. நிலம் கடினமாக இருப்பதால் நீர் ஊற்றி அதனை இலகுபடுத்தி இப்பணிகள் முன்னெடுக்கப்படுகின்ற அதேவேளை, எக்ஸ்காவேட்டர் மற்றும் பொசினா போன்ற இயந்திரங்களைக் கொண்டு கண்ணிவெடியகற்றும் செயற்பாடு மேற்கொள்ளப்படுகின்றது.

இப்பகுதியில் ஜொனி 99, ரங்கன் போன்ற மிதி வெடிகளே அதிகளவில் மீட்கப்பட்டுள்ளன. காலை 6 மணிக்கு ஆரம்பிக்கப்படும் எமது பணிகள் பகல் 2 மணியளவில் பூர்த்தியாக்கப்படும். அன்றைய நாள் வேலையை முடித்துவிட்டு குறுக்கே நிற்கக் கூடிய விதத்தில் சிவப்பு குச்சிகளை நட்டு விட்டு செல்வோம்'' என்றார். 'ஹெவி ட்ரெக் கடினமான இடத்தை இலகுவாக தோண்டிக்கொள்வதற்குப் பயன்படுத்தப்படும். லைட் ட்ரெக் இலகுவான நிலத்தைத் தோண்டுவதற்கு பயன்படுத்தப்படும். இவை கண்ணிவெடி நிபுணர்களால் பயன்படுத்தப்படுகின்றன. அதேபோல், மண்டையோட்டு அடையாளம் மற்றும் பட்டிகள் காணப்பட்டால் அங்கு கண்ணிவெடி அபாயம் உள்ளது என பொருள்படும்.

# அன்புள்ள அக்காவுக்கு...

### என்னுடைய நட்பைத் தெரிவித்தால் ஏற்றுக்கொள்ள மாட்டாரோ என்று பயமாக இருக்கிறது...

? நான் 17 வயது நிரம்பிய இலட்சிய நோக்குள்ள ஒரு பெண். நான் அழகாய் இல்லை என வருத்தப்படுகிறேன். என்னைத் தவிர என்னுடைய வகுப்பில் படிக்கும் சக மாணவிகளுக்கு ஆண் நண்பர்கள் (காதலன்) இருக்கின்றார்கள். எனக்கு ஒரு இளைஞனைப் பிடித்திருக்கின்றது. அவருடைய தோழியாக இருக்க விரும்புகின்றேன். என்னுடைய நட்பைத் தெரிவித்தால் ஏற்றுக்கொள்ள மாட்டாரோ என்று பயமாக இருக்கிறது. படிப்பில் என்னால் கவனம் செலுத்த முடியாதுள்ளது. அவரைப் பற்றி நினைப்பதை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. என்னுடைய கல்வியில் கவனம் செலுத்த விரும்புகிறேன். எப்பொழுதும் நல்லதொரு பெறுபேற்றைப் பெறும் நான் தற்போது என்னுடைய பெறுபேறுகள் குறித்துப் பயப்படுகின்றேன்.




**நட்பை மட்டுமே விரும்புவதாக இருந்தால் அதைத் தெரிவிப்பதற்கும் ஏற்றுக்கொள்ள மறுப்பது குறித்தும் நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும். விலைகொடுத்து வாங்குவதற்கு நட்பு என்பது வியாபாரமல்ல. ஒரு வேளை நீங்கள் வேறொன்றைப் பற்றிக் கூறுகின்றீர்களாக இருக்கலாம். நீங்கள் அந்த நபரால் கவரப்பட்டு அவரை உங்களுடைய நெருங்கிய நண்பராக்க விரும்பினால் அவருடன் நட்புடன் பழகுங்கள். ஆனால், அவரை வற்புறுத்த வேண்டாம். அவர் உங்களை விரும்பினால் நல்லது இல்லாவிட்டால் வாழ்க்கை அத்துடன் முடிந்துவிடுவதில்லை. மற்றவர் பற்றிய பூரிப்பில் இருப்பது தவறில்லை அதேவேளை, நீங்கள் உங்கள் கல்வியில் கவனம் செலுத்த வேண்டும். இது பற்றி சிந்தியுங்கள்.**

### பழிவாங்குவது என்பது எண்ணும்போது நல்லதாகத் தோன்றும் ஆனால் அது நடைமுறையில் நல்லதல்ல.

? நான் ஒரு பெண்ணால் ஏமாற்றப்பட்ட 22 வயதுடையவன். அவள் எனது தூரத்து உறவுப் பெண். எங்கள் உறவினர் ஒருவரின் வீட்டில் சில நாட்கள் சந்தித்துக்கொண்டதன் பின்னர் அவள் தன் காதலைத் தெரிவித்தாள். நானும் சம்மதித்தேன். இரண்டு வருடங்கள் கழிந்த நிலையில் அவள் எமது பெற்றோரின் அனுமதியின்றி தன்னைப் பதிவுத் திருமணம் செய்துகொள்ளுமாறு என்னை வற்புறுத்தினாள். நாங்கள் அடிக்கடி சந்தித்துக்கொண்டோம். அவளுடனான எனது காதல் ஆழமானதன் பின்னர் அவள் இல்லாமல் என்னால் வாழ முடியாது என்று சிந்திக்கத் தொடங்கினேன். ஒரு நாள் என்னிடம் வந்து அவள் வேறொருவரைக் காதலிப்பதாகத் தெரிவித்தாள். நான் அவளுக்கு விவாகரத்து வழங்காவிட்டாலோ எமது திருமணத்தைப் பற்றி வேறு எவரிடமாவது தெரிவித்தாலோ தற்கொலை செய்துகொள்வதாக என்னை மிரட்டினாள். எனக்கு என்ன செய்வதென்று தீர்மானிக்க முடியாதுள்ளது. அவளுக்கு ஒரு நல்ல பாடம் கற்பித்து பழிவாங்க விரும்புகின்றேன். நான் என்ன செய்ய வேண்டும் என்று கூறி உதவுங்கள்.




**பழிவாங்குவது என்பது எண்ணும்போது நல்லதாகத் தோன்றும் ஆனால் அது நடைமுறையில் நல்லதல்ல. விரும்பிய ஒருவரைப் பிரிவதென்பது கடினமானது தான். ஆனால் பிரிந்துசெல்ல விரும்பும் உறவைத் தொடர வழியில்லை. அவள் உங்களுடனான உறவைத் துண்டிக்க விரும்புகிறாள். இந்நிலையில் இரசியமாக நடந்த திருமணம் குறித்து இந்த இக்கட்டான நிலையில் எண்ணுவது அர்த்தமில்லாதது. தற்கொலை நாடகம் கூட நிலைமையை மோசமானதாக்கும்.**

**நீங்கள் இந்த உறவிலிருந்து விடுபட விரும்பினால் சட்டப்படி பிரிவதை உறுதிப்படுத்திக்கொள்ளுங்கள். சட்டபூர்வமான விவாகரத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும். நீங்கள் ஏமாற்றம் மற்றும் கோபம் காரணமாக விவாகரத்துக் கொடுக்காமல் இருக்க நினைக்கலாம். ஆனால் இதனை அவர் எதிர்காலத்தில் தனக்கு சாதகமாகப் பயன்படுத்தி உங்களுடைய சட்டபூர்வமான மனைவியாக தன்னுடைய உரிமைகளைப் பெற்றுக்கொள்ளக் கூடியதாக அமைந்துவிடும்.**

**இம்மாதிரியான சூழ்நிலை வருத்தத்திற்குரியது தான். இருந்தாலும் திருமணப் பதிவு இரகசியமாக நடந்ததன் காரணமாக நீங்கள் தனிமையில் வருந்துவது அதைவிட மிகவும் வேதனைக்குரியது. ஆனால் வாழ்க்கை இன்னும் இருக்கின்றது என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். நீங்கள் மனவேதனையில் இருக்கும்போது இதனைக் கருத்திற்கொள்வது கடினம் தான். ஆனால் அதனைக் கருத்திலெடுப்பதுதான் சிறந்தது.**

---

**உங்கள் பிரச்சினைகளுக்கும் 'அக்கா' பதிலளிக்க காத்திருக்கிறார். கீழ்காணும் முகவரிக்கு உங்கள் பிரச்சினைகளை எழுதி அனுப்புங்கள்**

**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ.இல : 1039 கொழும்பு**





**மீண்டும் வாழ்வோம் (Lifeline) செயற்றிட்டமானது USAID இனால் நிதியளிக்கப்பட்டு Internews Network இனால் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.**






**குறள் 20**

நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு.

**விளக்கம்:**
நீர் இல்லாமல் எத்தகையோருக்கும் உலக வாழ்க்கை அமையாது என்றால், மழை இல்லாமல் ஒழுக்கமும் நிலைபெறாது.

## சிறார்களின் கைவண்ணத்தில்....



**வீ. துஷா**
வீ. இல. 708, வலயம் - 3
அருணாச்சலம் ந.பு.நி.



**ஜெ. ஹேமப்ரியா**
தரம் - 9,வீ. இல. 4185
அருணாச்சலம் ந.பு.நி.



**க. சர்மிளா**
தரம் - 9, வீ. இல. 112
வலயம் - 43, இராமநாதன் ந.பு.நி.



**கண்ணன் துர்க்கா**
தரம் - 9, வலயம் - 4, இராமநாதன் ந.பு.நி.




**நி. கஜேந்திரன்**
தரம் - 11, அருணாச்சலம் ந.பு.நி.



**ஜெ. பற்றிசியா**
தரம் - 11
வீ. இல. 22
வலயம் - 32
இராமநாதன் ந.பு.நி.

**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ.இல : 1039 கொழும்பு,**
**தம்பி, தங்கைகளே....சித்திரம், கவிதை, கதை, கட்டுரை.... மற்றும் உங்கள் புதிய ஆக்கங்களை எமது முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.**

## சிங்களம் සිංහල Sinhala | Let's COMMUNICATE கற்போம் Lesson 14

**பாடம் 14**

**Birds-පක්ෂීන්-பறவைகள்**



| | | |
|---|---|---|
| කිකිළි | කපුටා | මොනරා |
| கிகிலி | கபுடா | மொனரா |
| கோழி | காகம் | மயில் |
| Hen | Crow | Peacock |

# இலங்கை மிருகக்காட்சிச் சாலையில் வெள்ளைப் புலிகள்



படப்பிடிப்பு : கிருஷ்ணி

**தெஹிவளை தேசிய மிருகக்காட்சிச் சாலையில் உள்ள வெள்ளைப்புலிகளில் ஒன்று**

சீனாவிலிருந்து இலங்கைக்குத் தருவிக்கப்பட்டுள்ள ஒரு ஜோடி வெள்ளைப் புலிகள் தெஹிவளை தேசிய மிருகக்காட்சி சாலைக்கு வரும் பார்வையாளர்களைப் பெரிதும் கவர்ந்து வருகின்றன.

சீனாவின் ஷியாங் ஜியாங் ஷபாரி பார்க் (Xiang Jiang Safari Park) இலிருந்து மூன்றரை வயதுடைய ஆண் வெள்ளைப்புலி ஒன்றும் 3 வயதும் 2 மாதங்களுமுடைய பெண் வெள்ளைப்புலி ஒன்றும் தருவிக்கப்பட்டுள்ளன. இவை மிருகப் பரிமாற்று நிகழ்ச்சித்திட்டத்தின் மூலமாக கொண்டு வரப்பட்டதாகவும் இதற்காகத் தாம் சீனாவிற்கு சிம்பன்சியினையும் ஒரு சோடி சில்வர் லீஃப் (Silver Leafe) எனப்படும் குரங்குகளையும் வழங்கியதாக தெஹிவளை தேசிய மிருகக்காட்சி சாலையின் உதவிப் பணிப்பாளர் தம்மிக்க மல்சிங்க குறிப்பிட்டார். மேலும் ஆண் புலிக்கு 'சுதாரா' எனவும் பெண் புலிக்கு 'ஸ்வேத்தா' எனவும் தாம் பெயரிட்டிருப்பதாகவும் அவர் குறிப்பிட்டார்.

பூனைக் குடும்பத்தின் மிகப்பெரிய அங்கத்தினர் புலிகளாகும். உலகில் ஐந்து வகையான உப இனங்கள் தற்போது வாழ்ந்து வருகின்றன. உயர் வெப்ப அனற் காடுகளிலும் பனிபடர் குளிரான மழைக்காடுகளில் பொதுவாக இவை வாழ்ந்து வருகின்றன. பின்னடைவான மரபணுக்கள் காரணமாகவே இவற்றிற்கு வெண்மை நிறம் தோன்றியுள்ளனவே தவிர இவை அல்பினோக்கள் (நிறமற்றவை) அல்ல.

பெந்தரா டைகரீஸ் (Panthera tigiris) எனும் விஞ்ஞானப் பெயருடைய இந்த வெள்ளைப் புலிகள் அழிந்து வரும் இனமாக அடையாளங் காணப்பட்டுள்ளன. இவை 3 மீற்றர் நீளத்துடன் 180 முதல் 260 கிலோ எடை வரையில் வளரக்கூடியவை. நீல நிறக் கண்களையுடைய இவை காட்டுப் பன்றி, காட்டுப்பசு, பல்வேறுபட்ட மான் இனங்களை உணவாக விரும்பி உட்கொள்கின்றன.

இவற்றின் கர்ப்ப காலம் 103 நாட்களாகும். இரண்டு அல்லது மூன்று குருளைகளை ஒரு பிரசவத்தின்போது ஈனுகின்றன. பொதுவாக காட்டில் இவற்றின் ஆயுட்காலம் 10 வருடங்கள் என்றாலும் மிருகக்காட்சிச் சாலையில் உரிய பராமரிப்பின் காரணமாக இரட்டிப்பான ஆயுட்காலத்தைப் பெறக்கூடியது. உலகில் தற்போது 120 வெள்ளைப் புலிகளே உயிர் வாழ்வதாக நேஷனல் ஜியாகிரஃபி (National Geographic) இணையத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.



**"புலிகளுக்கு பதிலாக நாம் சீனாவிற்கு ஒரு சிம்பன்சியினையும் ஒரு சோடி சில்வர் லீஃப் (Silver Leave) எனப்படும் குரங்குகளையும் வழங்கியதாக தெஹிவளை தேசிய மிருகக்காட்சி சாலையின் உதவிப் பணிப்பாளர் தம்மிக்க மல்சிங்க குறிப்பிட்டார்."**

### தெஹிவளை மிருகக்காட்சி சாலையில் 2 வெள்ளைப் புலிகள்

**கிடைக்கப்பெற்ற நாடு :** சீனா (Xiang Jiang Safari Park)
பெயர்/வயது: ஆண் சுதாரா 3வயது 6மாதம்
பெண் ஸ்வேத்தா 3வயது 2மாதம்

**வெள்ளை இனத்தின் வேறுபாடு:**
வெண்ணிறமாவதிற்கு மரபணு மாற்றமே காரணம்
இரண்டு வெள்ளை புலிகளுக்கு பிறக்கும் குட்டிகளில்
25 வீதமே வெள்ளை புலிகளாக பிறக்கும் சாத்தியம் உள்ளது.
மிகுதி 50 வீதம் மஞ்சள் வெள்ளை மற்றும் மிகுதி 25 மஞ்சள் கருப்பு ஆக பிறக்கும் சாத்தியம் அதிகம்

**புலிகள் பற்றிய பொதுவான விடயங்கள் சில:**
ஆண் நிறை: 180-260 கி.கி பெண்: 150-200 கி.கி
காணப்படும் நாடுகள்: சீனா, இந்தியா, வடமேற்கு ரஷ்யா, இந்தோனேஷியா, சுமாத்ரா தீவுகள்
குட்டிகள் : 2-3 (ஆகக்கூடியது 5)
எண்ணிக்கை: 10 ஆண்டுகளுக்கு முன்பு 100,000 ஆகவிருந்தது, தற்போது 8,000 ஆக குறைந்துள்ளது.

Graphics : Suren

# மீள்குடியேறிய மக்களை மகிழ்ச்சிப்படுத்த கற்குளத்தில் விளையாட்டுப் போட்டிகள்

*நிரஞ்சனி ரோலண்ட்*

நாட்டில் நிலவிய அசாதாரண சூழ்நிலையின் காரணமாக 1997 ஆம் ஆண்டு கிளிநொச்சியிலிருந்து இடம்பெயர்ந்து வவுனியா சிதம் பரபுரத்தில் வாழ்ந்து வந்த மக்கள் வவுனியா மாவட்டத்திலுள்ள கற்குளம் கிராமத்தில் மீளக் குடியேற்றப்பட்டுள்ளனர். மீள்குடியேறி ஒரு வருடமாகின்ற நிலையில் இவர்கள் மத்தியில் கிராமிய அபிவிருத்தி நிலையத்தினால் விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்பட்டுள்ளன.

இவர்களின் வாழ்க்கை முறையில் முன்னேற்றத்தை ஏற்படுத்தும் வகையில் கிராமிய அபிவிருத்தி நிலையம் பல்வேறு திட்டங்களை முன்னெடுத்து வருகின்றது. அதற்கமைய கற்குளம் கிராமத்தில் வாழும் சிறுவர்கள், யுவதிகள் மற்றும் இளைஞர்களின் விளையாட்டுத் திறமைகளுக்குக் களம் அமைத்துக்கொடுக்கும் விதமாக விளையாட்டுப் போட்டிகள் கடந்த முதலாம் திகதி நடத்தப்பட்டன.

அங்குள்ள இளைஞர்களை ஒன்று திரட்டி 'லக்கி ஸ்டார்' என்ற விடியாட்டுக் கழகமொன்று அமைக்கப்பட்டு அதனூடாக இந்த விளையாட்டுப் போட்டிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. கிரிக்கட், கரப்பந்தாட்டம், வலைப்பந்தாட்டம், கயிறு இழுத்தல் உட்பட பல போட்டிகள் இங்கு நடைபெற்றன.

உடலுக்கும் மனதுக்கும் புத்துணர்ச்சியை ஏற்படுத்தக் கூடிய விதமாக அமைந்துள்ள இந்த விளையாட்டுப் போட்டிகளினூடாக இளைஞர்களிடையே ஒற்றுமையைக் கட்டியெழுப்பலாம் என அந்த விடியாட்டுப் போட்டியில் சிறப்பு விருந்தினராக கலந்துக்கொண்ட சிதம்பரபுரம் பொலிஸ் நிலைய பொறுப்பதிகாரி ஜெ.விஜேந்திரன் தெரிவித்தார்.

> **கிரிக்கட், கரப்பந்தாட்டம், வலைப்பந்தாட்டம், கயிறு இழுத்தல் உட்பட பல போட்டிகள் நடைபெற்றன.**

> **உடலுக்கும் மனதுக்கும் புத்துணர்ச்சியை ஏற்படுத்தக் கூடிய விதமாக அமைந்துள்ள இந்த விளையாட்டுப் போட்டிகளினூடாக இளைஞர்களிடையே ஒற்றுமையைக் கட்டியெழுப் பலாம் - ஜெ.விஜேந்திரன்**

இதேவேளை, விளையாட்டுப் போட்டியில் பிரதம விருந்தினராக கலந்துக்கொண்ட கற்குளம் கிராம சேவகர் சந்திரகுமார் உரையாற்றுகையில் கூறியதாவது:

'இந்த விளையாட்டுப் போட்டியானது பல்வேறு குறைபாடுகளைக் கொண்டுள்ளது. அதனைப் பொருட்படுத்தாது நீங்கள் உங்களது திறமைகளை சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளீர்கள். இந்த இடத்தில் நீங்கள் குடியேற்றப்பட்டு ஒரு வருடம் ஆகின்றது. இங்குள்ள நிறைகளை மாத்திரம் மனதில் சுமந்தபடி வாழ்க்கையில் முன்னோக்கிச் செல்ல வேண்டும் என்றார்.

தமது திறமைகளை வெளிக்காட்டுவதற்கு இது ஒரு நல்ல களமாக அமைந்ததுடன் பொழுது போக்கு அம்சமாகவும் விளங்கியது என கற்குளம் கிராமத்தைச் சேர்ந்த இளைஞர் டினேஷ் தெரிவித்தார்.

இது தொடர்பாக அவர் மேலும் தெரிவிக்கையில், வெற்றி, தோல்வி என்பதற்கு அப்பால் போட்டி முடிவுகளை சந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்ளுமளவுக்கு நாம் பக்குவமடைந்துள்ளோம். விளையாட்டுத் திறமைகளை வெளிக்காட்டுவதற்கு அனைவருக்கும் இவ்வாறான சந்தர்ப்பம் அமைந்து விடாது. ஆகவே, சந்தர்ப்பங்கள் எங்களைத் தேடி வரும் வரை காத்திராமல் அதனைத் தேடிச் சென்று பயனடைவதற்கு நாம் எம்மைத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும்' என்றார்.

கற்குளம் கிராமத்தில் வசித்து வரும் ஜொன்சன் என்ற இளைஞர் கூறுகையில், இந்தக் கிராமத்தில் பல இளைஞர்கள் உள்ளனர். அவர்கள் அனைவரையும் உள்வாங்கக் கூடிய விதத்தில் இவ்வாறான போட்டிகள் ஏற்பாடு செய்யப்பட வேண்டும். அதேபோல், கிராம அபிவிருத்தி நிலையம் மாத்திரமல்ல அனைத்துத் தரப்பினரும் எமது நலனில் அக்கறையுடன் செயற்பட வேண்டும்'' என்றார்.



படம்: நிரஞ்சனி ரோலண்ட்

கரப்பந்தாட்டப்போட்டிகள்

> **வெற்றி, தோல்வி என்பதற்கு அப்பால் போட்டி முடிவுகளை சந்தோஷத்துடன் ஏற்றுக்கொள்ளுமளவுக்கு நாம் பக்குவமடைந்துள்ளோம்.**

இடம்பெயரந்து பல்வேறு சிரமங்களை எதிர்கொண்ட இந்த மக்களின் வாழ்க்கையில் மாற்றங்களை ஏற்படுத்துவதற்காக இவ்வாறான போட்டிகள் நடத்தப்படுவது வரவேற்கத்தக்கது. எனினும், இத்தகைய திட்டங்கள் தொடர்ச்சியாக முன்னெடுக்கப்பட வேண்டும் என்பதே இந்தக் கிராமத்து மக்களின் எதிர்ப்பார்ப்பாக உள்ளது.

---

## மீள்...

(1ஆம் பக்கத் தொடர்ச்சி...)

வார்த்தையும் நடைபெற்று வருகின்றது' என்றார்.

இது இவ்விதமிருக்க, சமூகத்திலிருந்து போதைப் பழக்கத்தை ஒழிப்பதற்கு அரசாங்கம் மேற்கொண்டு வரும் நடவடிக்கைகள் பெரிதும் பலனளித்து வருவதாக பல்வேறு சமூகநல அமைப்புக்கள் திருப்தி வெளியிட்டு வருகின்றன.

ஊறு விளைவிக்கக் கூடியதும் சர்வதேச ரீதியில் சட்டவிரோதமாக்கப்பட்டுள்ளதுமான ஹெரோயின் போன்ற போதைப் பொருட்கள் மாத்திரமன்றி மதுபானம், சிகரட் ஆகியவற்றின் பாவனையும் எமது நாட்டில் தற்போது பெருமளவு குறைந்திருப்பதாக அறிக்கைகள் தெரிவிக்கின்றன. இலங்கையில் மதுபான உற்பத்தியில் ஏற்பட்டிருக்கும் ஒன்பது சதவீத வீழ்ச்சியையும் சிகரட்டுகளின் விற்பனை வீழ்ச்சியையும் இங்கே குறிப்பிடுதல் பொருத்தமாகும்.

நாட்டில் போதையற்ற சமுதாயமொன்றைக் கட்டியெழுப்பும் நோக்குடன் அரசாங்கம் முன்னெடுத்திருக்கும் திட்டத்துக்குக் கிடைத்துள்ள வெற்றி இதுவாகும். போதையற்ற சமுதாயத்தை உருவாக்குவதென்பது ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ஷவின் சிந்தனையில் உதித்த திட்டமென்பதை இங்கே குறிப்பிடுவது அவசியம்.

சமுதாயத்தை சீரழித்துக் குட்டிச்சுவராக்குவதில் மதுபானம், போதைவஸ்து, புகைத்தல் ஆகியவை முக்கிய பங்கு வகிக்கின்றன. இது போன்ற தீய பழக்கங்களால் உடல் ஆரோக்கியம் பாதிக்கப்பட்டு மனிதன் நோயாளியாகுவது ஒருபுறமிருக்க, குடும்பத்தின் வருமானம் வீணடிக்கப்பட்டு வறுமையும் ஏற்படுகிறது. பொருளாதாரச் சிக்கலினால் குடும்பத்தில் சச்சரவுகள் தோன்றி குடும்பக் கட்டமைப்பும் சீர்குலைகிறது.

இந்நிலையில் மதுபாவனையிலிருந்து சமுதாயத்தை மீட்பதற்கு உறுதியான திட்டங்கள் அவசியமாகின்றன. அரசாங்கம் இவ்விடயத்தில் கடுமையான நடவடிக்கைகளை நடைமுறைப்படுத்தி வருவதன் காரணமாகவே மது, போதைவஸ்து, புகைத்தல் பழக்கங்கள் நாட்டில் தற்போது பெருமளவில் குறைந்துள்ளன.

எமது நாட்டில் இன்றெல்லாம் பொது இடங்களில் எவராவது புகை பிடிப்பதைக் காண்பது மிகவும் அரிது.

ஒழுக்க விழுமியம் நிறைந்த சமுதாயமொன்றைக் கட்டியெழுப்ப வேண்டுமாயின் இத்தகைய கண்டிப்பான செயற்திட்டங்கள் மிகவும் அவசியமாகும். சமூகத்தில் இடம்பெறுகின்ற பல்வேறு குற்றச்செயல்களுக்கும் மது, போதைவஸ்துப் பாவனையே அடிப்படையாகும். போதையை ஒழிப்பதானது குற்றச் செயல்களைக் குறைப்பதற்கு பெருமளவில் உதவுமென்பதில் ஐயமில்லை.

---

## பெற்றோ...

(5ஆம் பக்கத் தொடர்ச்சி...)

ளுக்கு ஒத்துழைப்பு வழங்க வேண்டும் என்றார்.

புலமைப்பரிசில் பரீட்சை, சாதாரண தரப்பரீட்சை போன்ற தேசிய மட்டத்திலான பரீட்சைகள் பள்ளிப் பருவத்தில் மாணவர்களுக்கு முக்கிய திருப்புமுனையாக அமைகின்றன. இத்தகைய சந்தர்ப்பத்தில் பெற்றோர் உட்பட அனைவரும் மாணவர்களை ஊக்கப்படுத்தி உதவினால் எமது நாட்டில் சிறந்த எதிர்கால சமூகத்தை உருவாக்க அது வழிவகுக்கும்.



இப்பத்திரிகை எக்ஸ்பிரஸ் நியூஸ்பேப்பர்ஸ் (சிலோன்) லிமிட்டெட்டாரால் கொழும்பு - 14, கிராண்ட்பாஸ் வீதி, 185ஆம் இலக்கத்தில் 2010ஆம் ஆண்டு மார்ச் மாதம் 14ஆம் திகதி ஞாயிற்றுக்கிழமை அச்சிட்டு வெளியிடப்பட்டது.